


தண்டபாணி சுவாமிகள் அருளிய

# சைவ சதகம்

'சுவடியியல் மற்றும் பதிப்பியல்' - பட்டயப் பேற்றிற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெறும் பதிப்பேடு

பதிப்பு
இரா. விஜயலட்சுமி

நெறியாளர்
முனைவர் ய. மணிகண்டன்

©
அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் மற்றும் ஆய்வு மையம்
2015

முனைவர். **தா. கார்த்திகேயன்,** இ.ஆ.ப.,
ஆணையர், தொல்லியல் துறை



தமிழ் வளர்ச்சி வளாகம், ஆல்சு சாலை,
எழும்பூர், சென்னை - 600 008.
தொ/நிகரி : 044 28190023
இமெயில் : tnarch@.nic.in,
archcommissioner@gmail.com
வலைதளம் : www.tnarch.gov.in

# பதிப்புரை

1869ஆம் ஆண்டு தோற்றுவிக்கப்பட்டு தற்போது தொல்லியல் துறையின் கட்டுப்பாட்டின்கீழ் இயங்கி வரும் அரசினர் கீழ்த்திசை ஓலைச்சுவடி நூலகம் மற்றும் ஆய்வு மையம் சுவடியியல் துறையின் வளர்ச்சிக்குப் பயன்படும் வகையில் ஓலைச் சுவடிகளைச் சேகரித்தல், தொகுத்தல், ஆராய்தல், பதிப்பிக்கப்படாத அரிய சுவடிகளை நூலாக வெளியிடுதலை முக்கிய நோக்கமாகக் கொண்டு செயல்பட்டு வருகிறது.

உலகளவில் சுவடியியல் ஆய்வுக்கு பெயர் பெற்ற இந்நூலகம் தமிழ், சமஸ்கிருதம், தெலுங்கு, கன்னடம், மராத்தி, உருது, அரபு, பாரசீகம் முதலிய மொழிகளில் 72,314 சுவடிகளை தன்னகத்தே கொண்டுள்ளது. இங்குள்ள சுவடிகள் இலக்கணம், இலக்கியம் மட்டுமின்றி ஏறத்தாழ இருநூறு, முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் தமிழகத்தின் அரசியல்நிலை, குறுநில மன்னர்கள் மற்றும் பாளையக்காரர்களின் வாழ்க்கைப் போராட்டங்கள், சமூகநீதி, சமுதாயப் பழக்கவழக்கங்கள், மலைவாழ் மக்களின் வாழ்க்கை முறைகள், பண்பாடு, அக்கால மொழி அமைப்பு, மொழிநடை, நாகரிகம், ஆடை அணிகலன்கள் முதலானவற்றை அறிந்து கொள்ள பயன்படும் வரலாற்று ஆவணங்களாக திகழ்கின்றன.

கி.பி. 1812ஆம் ஆண்டுக்கு முன்பு சுவடியியல் பணிகளிலுள்ள பல்வேறு இடர்ப்பாடுகள் மற்றும் பொருளாதாரச் சிக்கல் காரணமாகத் தனிநபர்கள் சுவடி பதிப்பு பணிகளை மேற்கொள்ளுவது மிகவும் கடினமான செயலாக இருந்தது. மேலும் வியாபார நோக்கிலான படைப்புகள் அல்ல என்பதனால் சுவடிப் பதிப்பு நூற்களை அச்சிட்டு வெளியிட தனியார் நூல் வெளியிட்டாளர் மற்றும் அச்சகத்தார் ஆர்வம் காட்டாமல் இருந்தனர்.

கி.பி. 1812இல் "திருக்குறள்-நாலடியார்" எனும் இரண்டு நூல்களும் ஒரே பதிப்பாக வெளிவந்ததைத் தொடர்ந்து பலருக்கும் எளிதில் பார்க்கவும் படிக்கவும் கிடைக்கும் வண்ணம் சுவடிகளைத் திரட்டிப் படியெடுத்து, செப்பம் செய்து நூலாகவோ, பிற ஊடகம் வாயிலாகவோ, தெளிவாகவும் சரியாகவும் தரும் சுவடிப் பதிப்பு பணி பெரும் வளர்ச்சி பெற்றது. இதனால் பல சுவடிகள் அழிவிலிருந்து பாதுகாக்கப்பட்டன.

தமிழக அரசின் ஊக்கம் காரணமாகத் தொல்லியல் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தமிழ் வளர்ச்சித் துறை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தஞ்சை சரஸ்வதி மகால் நூலகம் மற்றும் ஒரு சில பல்கலைக்கழகங்கள் சுவடிப் பதிப்பு பணியில் முழு ஈடுபாட்டுடன் இயங்க தொடங்கின.

சுவடிப் பதிப்பில் தனக்கென தனி ஒரு இடத்தைப் பெற்றுள்ள அரசினர் சுவடி நூலகத்தின் முதல் பதிப்பு பணி கி.பி. 1921ஆம் ஆண்டு 'பத்ய சூடாமணி - உரையுடன்' எனும் சமஸ்கிருத நூலுடன் தொடங்கியது. தமிழ்மொழியில் முதல் பதிப்பு 1950ஆம் ஆண்டு வெளிவந்தது. இவ்வாண்டு கப்பல் சாஸ்திரம், அனுபவ வைத்தியம், உபதேச காண்டம், சிவஞான தீபம், சோழன் பூர்வ பட்டயம், கொங்கு தேச ராஜாக்கள் சரித்திரம் என ஒன்பது நூல்கள் வெளிவந்தன. அதனைத் தொடர்ந்து பழமை மற்றும் கலாச்சாரத்தை வெளிபடுத்தும் வகையில் பன்மொழி சுவடிகளை பதிப்பித்து நூலாக வெளியிட்டு வருகிறது இந்நூலகம்.

இந்நூலகத்தின் பதிப்புகள் மறுபதிப்பாக வெளியிடப்படுவதில்லை என்ற குறையைப் போக்கும் வகையிலும் சுவடியிலிருந்து பதிப்பித்து வெளியிடப்படும் நூல்கள் பிற துறை நூல்களைப் போல எளிதில் பொதுமக்களை ஈர்ப்பதில்லை இவை ஆராயச்சியாளர்களுக்கு மட்டுமே பயன்படக்கூடியவை என்னும் தவறான கருத்து நிலவி வருவதை நீக்கும் வகையில் கீழ்காணும் 14 நூற்கள் உள்ளது என்பதால் அதனை மறுபதிப்பாக வெளியிட முடிவு செய்யப்பட்டது.

1. மருத்துவப் பெயரகராதி, 2. பாண்டிய மண்டல வரலாறுகள், 3. தொண்டை மண்டல வரலாறுகள், 4. முத்தையேந்திரர் குறவஞ்சி, 5. விசுவாமித்ர சுவாமி வாக்கியம், 6. தமிழர் மருத்துவம், 7. வைத்திய அகராதி, 8. கொங்கு மண்டல வரலாறுகள், 9. சோழ மண்டல வரலாறுகள், 10. சிலையெழுபது, 11. வீர சைவத் தீர்க்கை விதிப்பாடல், 12. சைவ சதகம், 13. வடமொழி அகர வரிசை அட்டவணை - தொகுதி 1, 14. வடமொழி அகர வரிசை அட்டவணை - தொகுதி 2

அரிய இந்நூற்களை மறுபதிப்பாக வெளியிட அனுமதி அளித்த தமிழக அரசுக்கும் மாண்புமிகு பள்ளிக் கல்வித் துறை அமைச்சர் அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல்களை மறுபதிப்பாக வெளிக் கொணர்வதற்கு சீரிய முயற்சி மேற்கொண்ட சுற்றுலா, பண்பாடு மற்றும் அறநிலையங்கள் துறை மற்றும் அரசு கூடுதல் தலைமைச் செயலாளர் முனைவர் **ரா. கண்ணன்,** இஆப., அவர்களுக்கும் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூலின் பிற்சேர்க்கையாக மூலசுவடியின் நகலை இணைக்க அறிவுரை வழங்கி இந்நூல்கள் மறுபதிப்பாக வெளிவருவதின் முழுப் பெருமையும் அவரையே சாரும். மேலும் இந்நூல்களை பதிப்பித்து வெளியிட்ட அன்றைய பதிப்பாசிரியர்களின் முயற்சி பெரும் பாராட்டுதலுக்குரியது.

இந்நூலினை சிறப்பாக வெளியிட பன்முகமாக பணி புரிந்த தொல்லியல் துறையின் தொல்லியல் துணை கண்காணிப்பாளர் திருமதி சீ. வசந்தி அவர்களுக்கும், திரு. இரா. சிவானந்தம், கல்வெட்டாய்வாளர் மற்றும் அரசினர் கீழ்த்திசை ஓலைச்சுவடி நூலகம் மற்றும் ஆய்வு மையத்தின் நூலகர் திரு. இர. சந்திரமோகன் அவர்களுக்கும், இந்நூலைச் செம்மையாக அச்சிட்டு வழங்கிய இராயப்பேட்டை எழுதுபொருள் மற்றும் அச்சகத்தாருக்கும் எனது பாராட்டைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சுவடியியல் ஆராய்ச்சியாளர்கள், பேராசிரியர்கள், புதிய செய்திகளைத் தெரிந்து கொள்ள ஆர்வம் பெற்றவர்கள் மற்றும் புதிய நூற்களைப் படைக்கத் தேவையான தரவு வேண்டி அணுகுபவர்கள் என பலதரப்பட்ட உள்நாட்டு மற்றும் அயல்நாட்டு வாசகர்கள் அரிய இந்நூற்களை படித்து பயனடைய வேண்டும் என அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

முனைவர். **தி. கார்த்திகேயன்,** இஆப.,
ஆணையர், தொல்லியல் துறை

இடம் : சென்னை
நாள் : /03/2015

‘சுவடியியல் மற்றும் பதிப்பியல்’
பட்டயப் பேற்றிக்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெறும் பதிப்பேட்டு எண் : 5025

# நெறியாளர் சான்றிதழ்

முனைவர் ய. மணிகண்டன்
விரிவுரையாளர்
தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை - 600 005.

தண்டபாணி சுவாமிகள் அருளிய 'சைவ சதகம்' எனும் தலைப்பிலான ஓலைச்சுவடியைச் 'சுவடியியல் மற்றும் பதிப்பியல்' எனும் பட்டயம் பெறுவதற்காக இரா. விஜயலட்சுமி அவர்கள் என் மேற்பார்வையில் பதிப்புச் செய்தார் என்றும் இப்பதிப்பு இவர் தம் தனி முயற்சியில் உருவானது என்றும் சான்றளிக்கிறேன்.

நாள் :
இடம் : சென்னை - 5.

நெறியாளர்

(ய. மணிகண்டன்)

# பதிப்பாளர் உறுதிமொழி

இரா. விஜயலட்சுமி
தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை - 600 005.

'சுவடியியல் மற்றும் பதிப்பியல்' எனும் பட்டயப் பேற்றிற்காகச் சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப் பெறும் தண்டபாணி சுவாமிகள் அருளிய 'சைவ சதகம்' எனும் தலைப்பிலான இப்பதிப்பேடு என் தனி முயற்சியில் உருவானது என்றும் உறுதியளிக்கிறேன்.

நாள் :
இடம் : சென்னை - 5.

பதிப்பு மாணவர்

(இரா. விஜயலட்சுமி)

# பதிப்புரை

மரத்தில் எழுதுதல், கல்வெட்டு / செப்பேட்டில் எழுதுதல், சுவடியில் எழுதுதல் என்று, எழுதுப முறை படிப்படியான வளர்ச்சியடைந்துள்ளது. தாள்களில் எழுதும் முறை புழக்கத்திற்கு வந்த பிறகும் சுவடியில் எழுதி வந்த மரபும் 20ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதி வரையிலும் தொடர்ந்தன. அத்தகைய சுவடிகள் இலக்கியம், இலக்கணம், கலை, மருத்துவம், சோதிடம் போன்ற பல திறத்தன.

இத்தகைய சுவடிகள் மடங்களிலும், கோயில்களிலும், நூலகங்களிலும், தனிநபர் சார்ந்தும், தொகுத்துப் பாதுகாத்து வைக்கப்பட்டன. அவை இன்றளவும் பாதுகாக்கப் படுகின்றன; அறிஞர் பெருமக்களால் பயன்படுத்தப்பட்டும் வருகின்றன.

கி. பி. 19ஆம் நூற்றாண்டில் ஐரோப்பியர் வருகையால் அச்சு இயந்திரம் தமிழகத்துக்கு அறிமுகமாகியது. 1837களில் அனைவருக்கும் அச்சு இயந்திரம் பயன்படுத்தும் உரிமம் வழங்கப்பட்டது. இதனால் பலரும் அரிய நூல்கள் பலவற்றைப்

பதிப்பித்தனர். ஆகையால் கி. பி. 19 – 20ஆம் நூற்றாண்டைப் 'பதிப்புக் காலம்' என்றே குறிப்பிடலாம்.

பதிப்பு வரலாற்றில் சி. வை. தாமோதரம் பிள்ளை, உ. வே. சாமிநாதையர், ஆறுமுக நாவலர். எஸ். வையாபுரிப் பிள்ளை, மர்ரே நிறுவனம் போன்றோர் முதன்மை இடத்தைப் பெறுகின்றனர். மேலும், சுவடியியல் நூலகங்களாகிய, அரசினர்க் கீழ்த்திசை சுவடியியல் நூலகம். தஞ்சை சரஸ்வதி மஹால் நூலகம், உ. வே. சா. நூலகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், ஆசியவியல் நிறுவனம் போன்ற பல நூலகங்களும் சிற்றிலக்கியங்கள், இலக்கணம் மற்றும் மருத்துவம் சார்ந்த, இன்னும் அச்சேறாத பல சுவடிகளைப் பாதுகாப்பதோடு பதிப்பித்தும் வருகின்றன.

சிரவைக் கௌமார மடத்தினர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் எழுதிய சுவடிகளைப் பாதுகாப்பதோடு பதிப்புப் பணியிலும் ஈடுபட்டு வருகின்றனர். சுவாமிகள் எழுதிய பக்தி இலக்கியமாகிய 'சைவ சதகம்' என்னும் இச்சுவடி, சென்னைப் பல்கலைக்கழகம் நடத்தும் 'சுவடியியல் மற்றும் பதிப்பியல்' பட்டயப் படிப்பிற்காகப் பதிப்பாளரால் நூலாகப் பதிப்பிக்கப்படுகிறது.

❖❖❖

# நன்றியுரை

சுவடியியல் மற்றும் பதிப்பியல் பட்டய மேற்படிப்பினைச் சென்னைப் பல்கலைக்கழகத்தில் தோற்றுவித்து இரண்டாவது ஆண்டாகச் செம்மையுற செயல்படுத்திய தமிழ் இலக்கியத் துறைத் தலைவரும் எங்களது பேராசிரியருமாகிய முனைவர் வீ. அரசு ஐயா அவர்களுக்கு நன்றிப் பாராட்டக் கடமைப் பட்டுள்ளேன்.

சுவடி பட்டய வகுப்பில் சுவடிப் பயிற்சி வழங்கியவரும், நெறியாளருமான பேராசிரியர் முனைவர் ய. மணிகண்டன் அவர்களுக்கு நன்றியை உரித்தாக்குகிறேன்.

சுவடி சிறப்பு வகுப்பு நடத்திய முனைவர் கு. நிர்மலா தேவி, பேராசிரியர் சீனிவாசன் ஆகியோர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சுவடி சிறப்பு வகுப்பு நடத்தியதோடு, சுவடிப் படியில் பிழைத்திருத்தியும், பதிப்பித்தலின் போது பல நிலைகளில்

ஆலோசனையும் வழங்கிய புலவர் ப. வெ. நாகராஜன் ஐயா அவர்களுக்கும் மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தண்டபாணி சுவாமிகள் எழுதிய 'சைவ சதகம்' என்னும் மூலச் சுவடியினை வழங்கி பதிப்பிக்க அனுமதியளித்த சிரவைக் கெளமார மடத்தினர்க்கு நன்றினைப் தெரிவித்துக் கொள்கிறேன்.

சுவடி வகுப்பு நடத்தியதோடு மட்டுமல்லாமல் இந் நூல் உருவாக்கத்தில் உதவி செய்த முனைவர் கி. ஜெயகுமார் அவர்களுக்கு நன்றியினை உரித்தாக்குகிறேன்.

சுவடி நூல் வடிவம் பெற உறுதுணையாய் அமைந்து என்னை ஊக்கப்படுத்திய சகோதரிகள் இரெ. மிதிலா, நந்தமிழ் நங்கை மற்றும் தோழிகள் சு. மகேஸ்வரி, அற்புதமணி, லோ. ஜெயலட்சுமி, நண்பன் சே. சீனுவாசன் ஆகியோர்க்கும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன்.

நூலகங்களில் தேவையான புத்தகங்களை வழங்கி உதவி புரிந்த மறைமலை நூல்நிலைய நூலகர்

திரு. முத்து குமாரசாமி அவர்களுக்கும், திருவல்லிக்கேணி தேவநேய பாவாணர் (கிளை நூலகம்) – நூலகர் திருமதி. கீதா மற்றும் திருமதி. பாக்கியம் ஆகியோர்க்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கவடியை எனக்கு முதலில் அறிமுகப்படுத்திய ஆசான் டாக்டர் ஜோதி அக்பர் அவர்களை நன்றியோடு நினைக்கிறேன்.



# பொருளடக்கம்

# ஆசிரியர் வரலாறு

| | | |
|---|---|---|
| பெயர் | : | வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் |
| பிறப்பு | : | 2–11–1839 |
| ஊர் | : | திருநெல்வேலி |
| தந்தை | : | செந்தில் நாயகம் பிள்ளை |
| தாயார் | : | பேச்சுமுத்தம்மை |
| இயற்பெயர் | : | சங்கரலிங்கம் |
| சமயம் | : | முருகனை வழிபடு கடவுளாகக் கொண்ட கௌமார சமயத்தவர். |
| மறைவு | : | 5–7–1898 |
| ஆளுமை | : | 19ஆம் நூற்றாண்டின் தமிழ்ப் புலவர்களுள் தலைசிறந்தவர். |

முருகன் மீது மிகுந்த ஈடுபாடுடையவர். இவர்தம் ஒன்பதாம் அகவையிலேயே கவிபாடும் வல்லமை பெற்றார். உடல் முழுவதும் நீறுபூசி, காவி சிற்றாடை அணிந்து, விரிந்த தலைமுடி, உருத்திராக்க மாலை, கைத்தண்டம் ஆகியவற்றோடு தோற்றமளித்தால் 'தண்டபாணி சுவாமிகள்' என்று அழைக்கப்பட்டார். வண்ணங்களைச் சரளமாகப் பாடுவதில் இவர் வல்லவராகத் திகழ்ந்ததால் 'வண்ணச்சரபம்' என்ற அடைப்பெயரால் வழங்கப்பட்டார்.

இவரால் இயற்றப்பெற்ற நூல்களுள், அறுவகை இலக்கணம், ஏழாம் இலக்கணம், வண்ணத்தியல்பு போன்ற புத்திலக்கணங்களும், திருவாமாத்தூர் புராணமாகிய தலபுராணமும், முசுகுந்த (இசை) நாடகமும், தன்னைப் பற்றி இவரெழுதிய சுயசரிதைக் காப்பியமான 'குருபரதத்துவமும்' மற்றும் நானிலைச் சதகம், திருச்செந்தூர் கோவை போன்றவையும் குறிப்பிடத்தக்கன.

சுவாமிகள் சதகம், அந்தாதி, பிள்ளைத் தமிழ், கோவை போன்ற எண்ணற்ற சிற்றிலக்கியங்களைப் பாடியுள்ளார் 20ஆம் நூற்றாண்டில் புத்திலக்கண / இலக்கிய மரபினை

உருவாக்கினார். மேலும் அவர் நாத்திகம் அல்லாத அனைத்துச் சமயத்தினரையும் போற்றுகிறார். கொலை, புலை உண்ணும் ஆங்கிலேயர்களை எதிர்த்து 'ஆங்கிலேயர் அந்தாதி' என்ற புதுமையான நூலைப் பாடியுள்ளார். தம் வாழ்நாளில் – 50 ஆண்டுகளில், 50,000க்கும் மேற்பட்ட கவிதைகள் எழுதிய பெருமையுடையவராக இன்றளவும் போற்றப்படுகிறார்.



# தமிழில் சதக இலக்கியம்

"விருந்தே தானும் புதுவது கிளந்த யாப்பின் மேற்றே" (தொல். பொருள். 540) எனும் தொல்காப்பியரின் விதிப்படி தமிழிலக்கிய உலகில் எண்ணற்ற இலக்கிய மலர்கள் மலர்ந்து மணம்வீசிக் கொண்டிருக்கின்றன. அவற்றுள், கி பி. 8ஆம் நூற்றாண்டில் புதிதாக மலர்ந்து இன்றளவும் தோன்றி மணம் வீசும் 'சதக இலக்கியமு'ம் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்

கி. பி. ஆறாம் நூற்றாண்டிலேயே சதக இலக்கியங்கள் வடமொழியில் செல்வாக்குப் பெற்றிருந்தன என்பதை அறியலாம்.

> *நூறு பாடல்கள் ஆகுவதால் சதம் என்ற சொல் அடிப்படையில் எழுந்த இவ்விலக்கிய வகை, முதலில் தொகுப்பாகம், பின்பு தனி நூலாகவும் அமைகிறது.*

என்ற ச. சிவகாமியின் (தமிழ்ச் சதக இலக்கியம், ப. 13) குறிப்பால் சதகத்தின் தோற்றத்தையும் வளர்ச்சியினையும் அறியலாம்.

எண்ணிக்கை அடிப்படையில் பாடல்களுக்குப் பெயரிடும் முறை மரபுத் தமிழில் பழமையான ஒன்றாதலால் (ஐங்குறு நூறு, அகநானூறு, பதிற்றுப்பத்து . . . . . ) சதக இலக்கியமும் அம்முறையில் பெயர் பெற்றது எனலாம்.

சதக இலக்கயத்திற்கு முதன்முதலில் கி. பி. 16ஆம் நூற்றாண்டில் தோன்றி 'பிரபந்த மரபியல்' என்னும் பாட்டியல் நூல் இலக்கணம் வரையறுக்கிறது. பின்னாளில் தோன்றிய நூல்களால்,

*- ஒரு பொருள் மீது நூற்பாடல் யாப்பது

*- ஒரு பாவில் (யாப்பில்), புலவர் தமக்கு விருப்பமான பொருளில் நூறு பாடல்கள் யாப்பது - ஆகிய இருநிலைகளில் சதக இலக்கியங்களில்வ பாடப் பெற்றுள்ளதை அறியலாம்.

## முதல் சதக இலக்கியம்

கி. பி. 8ஆம் நூற்றாண்டில் திருப்பெருந்துறை சிவபெருமான் மீது மாணிக்கவாசகர் பாடிய, அந்தாதித் தொடையில் அமைந்த நூறு பாடல்களையுடைய திருச் சதகமே – முதல்சதகம் என்று போற்றப்படுகிறது. 'சதகம்' என்ற சொல்லாட்சியை முதன் முதலில் தமிழில் பயன்படுத்தியவர் மாணிக்கவாசகரேயாவார்.

## பிற சதகங்கள்

கி.பி. 11ஆம் நூற்றாண்டில் ஆறைக்கிழாரால் பாடப்பெற்ற 'கார்மண்டல சதகம்' பொருண்மையால் தமிழ் இலக்கிய உலகில் சிறந்து விளங்குகிறது. கி.பி. 17ஆம் நூற்றாண்டில் தோன்றிய அறச் சதகமாகிய படிக்காசுப் புலவரின் தண்டலையார் சதகம் வாழ்க்கைக்கு வளம் சேர்க்கும் வாழ்வியல் சதகமாகப் போற்றப்படுகிறது. சிறந்த பழமொழிகள் மூலம் அறமுரைக்கும் தண்டலையார் சதகம் 'பழமொழி விளக்கம்' எனவும் போற்றப்படுகிறது.

பக்திச் சதகங்களும், வாழ்வியல் சதகங்களுமே தமிழில் அதிகம் காணப்படுகின்றன. இதுவரை 200 – க்கும் மேற்பட்ட சதக இலக்கியங்கள் தோன்றியுள்ளதை ச. சிவகாமி (தமிழ்ச் சதக இலக்கியம் – சதக வரிசை) பட்டியலிடுகிறார்.

கார்மண்டல சதகம், தொண்டை மண்டல சதகம், அறப்பளீச்சுர சதகம், குமரேச சதகம், திருவேங்கட சதகம் போன்ற பல சதகங்கள் உரையுடன் பதிப்பிக்கப்படுள்ளன. அச்சில் வராத பல சதக இலக்கியங்களைப் பதிப்பித்தால் அவற்றின் சிறப்பினை மேலும் அறிய இயலும்.

தமிழிலக்கிய உலகில் சதகங்கள் தமக்கென தனித்த இடம் பெற்றுத் திகழ்கின்றன. தமிழ் இலக்கிய – வரலாற்றாய்வுக்கு யாண்டும் சதகங்களின் பங்கு முக்கியத்துவம் வாய்ந்தவை.

சைவ சதகம் – சில குறிப்புகள்

பக்தி என்ற ஒரு பொருண்மையை அடிப்படையாகக் கொண்டு பல்வேறு யாப்புகளால் 'சைவ சதகம்' பாடப் பெற்றுள்ளது. சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் புகழ்மிகு தலங்களாகப் (தென்னாட்டு) பத்து திருத்தலங்களைத் தேர்ந்தெடுத்து அவ்வூரில் பெயர் பெற்ற சிவனின் பெருமைகளைப் பாடும் நோக்கில் பாடல்கள் அமைந்துள்ளன. புராணச் செய்திகள் மூலம் இறைவனின் பெருமைகளைத் தண்டபாணி சுவாமிகள் எடுத்துரைக்கிறார். ஒவ்வொரு பத்திலும், அதாவது பதிகத்திலும்

எட்டாவது பாடலில் அருச்சுனன் பற்றியும்,

ஒன்பதாவது பாடலில் விநாயகனும் முருகனும் சிவபெருமானின் மகனெனக் குறிப்பிடுகிறார்.

பத்தாவது பாடலில் நால்வர் (திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர்) பற்றிய செய்திகளையும் பாடியுள்ளார். இவ்வமைப்பு திருஞான சம்பந்தர் பாடிய தேவாரப் பதிகங்களை அடியொற்றியதாகும்.

இறைவனை இறைஞ்சும் (நேரடியாக) நோக்கத்துடன் சைவ சதகப் பாடல்கள் அமைந்துள்ளன. நாத்திகர்களை இறைவனுக்கும் தனக்கும் பகைவர்கள் என்று குறிப்பிடுகிறார். எளிமையானச் சொற்களைக் கொண்டு பல்வேறு யாப்புகளால் ஓசை நயத்துடன் சைவ சதகப் பாடல்கள் அமைந்துள்ளன.



# பாடல்களில் இடம் பெற்றுள்ள புராணச் செய்திகள்

வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் இறைவனாம் சிவபெருமானைப் போற்றுவதையே முதன்மையாகக் கொண்டு சைவ சதகம் பாடியுள்ளார். போற்றுவதுடன், இடையிடையே புராணச் செய்திகளையும் கூறிச் செல்கிறார்.

சிவபெருமான், தக்கனுடன் போர் புரிந்து வெற்றிகண்ட வரலாற்றை,

"*வாள்விடுத்துத் தக்கனுடன் கூறுகண்டாய்*"(5)

எடுத்துரைக்கிறார். சூகரத்தின் வெண்கோட்டைத் தோளில் பூண்டதைக் (17) குறிப்பிடுகிறார்.

ஆலால சுந்தரனார், பரவையார் மயற்கடலில் அழுந்த கண்டு, காலால் நடந்துச் சென்று சிவபெருமான் தூதுரைத்த வரலாற்றைப் (31) பாடுகிறார். விடத்தினின்று தேவர்களைக் காத்த சிவபெருமானின் செயலைக் குறிப்பிடுகிறார்.

நஞ்சையின் றமரர் தந்நடுக்கந் தீர்த்தவா (64)

மாலும், அயனும் தம்முள் போட்டியிட்டு சிவனின் அடிமுடி காண முயன்று முடியாதபோது அவர்களுக்கு சோதியாய் தோன்றி அருள்வழங்கிய வரலாற்றைப்பாடுகிறார்.

தேடும் அயன்மாற் கரியோனே (72)

காவ லிற்சிறந் துள்ள மாயனுங்
கமல வேதனுங் கருத நின்றவா (94)



# சைவ சதகம் போற்றும் திருத்தலங்கள்

## 1. திருவண்ணாமலை (நடுநாடு)

சுவாமி : அருணாசலேசுவரர்

அம்பிகை : உண்ணாமுலை

பஞ்சபூத தலங்களுள் இஃது தேயுலகம் (நெருப்பு) நினைத்தாலே முக்தி அளிக்கும் நிர்மலத்தலம். தேவியார் தவம் செய்து இறைவன் இடப்பாகம் பெற்ற தலம் என்றும், மாலும் அயனும் அடிமுடி தேடிக் காணாதபடி இறைவன் தீ வடிவினனாய்,

"ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதியாய்" நின்ற தலம்; முருகப் பெருமான் அருணகிரியாரை ஆட்கொண்ட தலம்; நால்வரும் பாடிய தலம்.

இத்தலத்தைக் குறித்துச் சம்பந்தர் இரண்டு பதிகங்களையும் அப்பர் மூன்று பதிகங்களையும் பாடியுள்ளனர். சுந்தரர் பல இடங்களில் அண்ணாமலையாரைப் போற்றித் துதிக்கிறார். மணிவாசகர் திருவெம்பாவை

"அண்ணாமலை தொழுவார் வினை வழுவாவண்ணம் அறுமே" என்று சம்பந்தர் குறிப்பிடுகிறார்.

மேலும், சைவ எல்லப்ப நாவலர் – அருணாசல புராணம் (தல புராணம்), சிவப்பிரகாசரின், 'சோணசைல மலை' 'பிரபுலிங்க லீலை', மாணிக்கவாசகரின் 'திருவெம்பாவை மற்றும் தேவாரத் திருப்பாடல்களால் இத்தலத்தின் சிறப்பினை அறியலாம்.

## 2. தில்லை (சிதம்பரம்) – சோழ நாடு

சுவாமி : ஸ்ரீமூலஸ்தானேசுவரர்

அம்பிகை : உமா மகேஸ்வரி

பஞ்ச பூதத் தலங்களுள் 'பொன்னம்பலம்' எனப் பெயர் பெறும் ஆகாயத் தலமாகும். சிவபெருமான் திருகோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் திருத்தலங்களில் முதன்மை யானதால் 'திருக்கோயில்' எனப் பெயர் பெற்றது தொன்மையானதுமாகும்.

மகாசிவலோகம், பூலோக கயிலாயம், பொன்னம்பலம் சிற்றம்பலம், தில்லைவனம், புலியூர் போன்ற பல பெயர்களைக் கொண்டது. சிற்றம்பலத்தின்கண் கூத்த பெருமான் ஆனந்த

திருநடனம் புரியும் தலம். இத்தலம் மூவர் தேவாரத் திருப் பதிகங்களையும் கொண்டது. 11 பதிகங்களில் சம்பந்தர் பாடியவை – 2, அப்பர் பாடியவை – 8, சுந்தரர் பாடியது – 1.

மாணிக்கவாசகர், திருமாளிகைத் தேவர், சேந்தனார் ஆகிய மூவரும் பாடியுள்ளனர். குமரகுருபரர் இத்தலம் குறித்துச் சிதம்பரச் செய்யுட்கோவை, சிதம்பர மும்மணிக்கோவை, சிவகாமியம்மை இரட்டை மணிமாலை ஆகிய முன்று நூல்களை இயற்றியுள்ளார்.

தேவாரப் பதிகங்கள் கண்டெடுக்கப்பட்ட சிறப்புடைய தலமாகச் சிதம்பரம் திகழ்கிறது.

### 3. திருக்காளத்தி: (தொண்டை நாடு)

சுவாமி : திருககாளத்திநாதர்
அம்பிகை : ஞானப்பூங்கோதை,
வண்டார் குழலி

பஞ்ச பூதத் தலங்களுள் இது வாயுத் (காற்று) தலமாகும். இறைவன் சன்னதியில் எரியும் திருவிளக்குகளில் ஒன்று எப்போதும் காற்றால் மோதப்பட்டது போல் அசைந்து கொண்டே இருக்கின்றது. மேற்கு நோக்கிய சந்நிதி.

சீ – சிலந்தி; காளம் – பாம்பு; அத்தி – யானை.

இம்மூன்றும் வழிப்பட்டமையால் 'சீகாளத்தி' எனப் பெயர் பெற்றது. இது 'தென்கயிலாயம்' (கயிலை பாதி காளத்தி பாதி என்பர்) எனவும் கூறப்பெறும்.

தட்சிண கைலாசம், ஸ்ரீ காளஹஸ்தி, சிவாநந்தகிரி, சிவாநந்தைக நிலையம், விஞ்ஞான ஷேத்திரம், கண்ணப்ப புரம், மும்முடிச் சோழபுரம் போன்ற பல பெயர்களுடையது.

நால்வர் பாடல்களைப் பெற்ற பெருமையுடையது இத்தலம். வீரைநகர் ஆனந்தக்கூத்தர் – திருக்காளத்திப் புராணம் (தல புராணம்) இயற்றியுள்ளார்.

## 4. திருவாரூர் (சோழ நாடு)

சுவாமி : வன்மீக நாதர்
அம்பிகை : அல்லியங்கோதை,
கமலாம்பிகை

பஞ்சபூதத் தலங்களுள் பிருதுவி தலமாகிய இத்தலத்தைத் "*திக்கெல்லாம் நிறைந்த புகழ்த் திருவாரூர்*" என்று போற்றித் துதிக்கிறார் அப்பர். பிறக்க முக்தி தரும் தலம்.

ஏயர்கோன், கலிகாமர், காடவர்கோன், கழற்சிங்கர், செருத் துணைவர், தண்டியடிகள், திருநீலகண்ட யாழ்பாணர் முதலியோர் வாழ்க்கைத் தொடர்பு கொண்ட தலம். “மீளா அடிமை” என்னும் திருப்பதிகம் பாடிச் சுந்தரர் வலக்கண் பெற்ற தலம்; சுந்தரர் பரவையார் திருமணம், சுந்தரருக்காகத் தூது சென்றது ஆகியன இங்கு நடந்தன.

மனுநீதி மகன் பசு கன்றின் மேல் தேரேற்றியது; கன்று இறந்ததும் வேந்தன் தன்மகன் மேல் தேர் ஏற்றிச் சென்றது முதலிய வரலாறுகளைக் காட்டக்கூடிய கல்தேர் இங்குள்ளது.

ஏழு திருமுறைகளிலும் மிகுதியான பாடல்கள் இத்தலத்திற்கு உண்டு. மூவரும் பாடிய தலம். சேரமான் பெருமாள் நாயனாரின் கமலாலயச் சிறப்பு, மறைஞான சம்பந்தரின் திருவாரூர் நான்மணிமாலை (1547), குமர குருபரரின் தியாகராச லீலை போன்ற பல நூல்கள் இத்தலத்தின் மீது பாடப்பெற்றவையே.

## 5. திருவானைக்கா (சோழ நாடு)

| | | |
|---|---|---|
| சுவாமி | : | ஜம்புகேசுவரர், ஆனைக்கா அண்ணல் |
| அம்பிகை | : | அகிலாண்ட நாயகி |

பஞ்ச பூத தலங்கள் இது அப்பு ஸ்தலம் (நீர்). இந்திரனுடைய வாகனமாகிய வெள்ளை யானை வழிபட்டமையால் இத்தலம் 'திரு ஆனைக்கா' எனப் பெயர் பெற்றது. சிவபெருமானை உமையம்மை வழிபட்ட தலம். நாடோறும் அம்மன் திருக்கோயிலில் குருக்கள் பெண்ணுடையைத் தரித்துக்கொண்டு உச்சக்கால பூசை வேளையில்வழிபாடு செய்கின்றனர்.

மூவரும் வழிபட்ட தலம். அருணகிரிநாதர் கமலை ஞானப்பிரகாசர், காளமேகப் புலவர் போன்ற பலரும் வழிபட்ட தலம்.

கச்சியப்ப முனிவரின் திருவானைக்கா புராணம், கமலை ஞானப்பிரகாசரின் தந்திவனப் புராணம் ஆகியன இத்தலத்தைப் போற்றுகின்ற நூல்களாகும். மேலும் 'திருவானைக்கா திருப்பணிமாலை' என்னும் நூல் அவ்வப்போது திருப்பணி செய்யப்பட்ட வரலாற்றை எடுத்துரைக்கின்றது. தமிழக வரலாற்றையும், கோயில் வரலாற்றையும் தெரிவிக்கும் 300 கல்வெட்டுக்கள் இங்குள்ளன.

## 6. பழமலை (நடு நாடு)

சுவாமி : விருத்தாசலேசர்,
பழமலைநாதர்

அம்பிகை : விருத்தாம்பிகை, பெரியநாயகி

சிவ ஸ்தலங்கள் ஆயிரத்தெட்டில் தலைமையான நான்கினுள் இத்தலமும் ஒன்றாகும் (ஏனைய மூன்று – காசி, சிதம்பரம், காளத்தி). சிதம்பரம் சிவபெருமான் திருநடனத்துக் குரிய தலமென்றும், இது குலாவி வீற்றிருத்தற்குரிய தென்றும் கூறுவர்.

*ஊடு காண மூடும் வெள்ளத் துயர்ந்தது முதுகுன்றே*

என்று சம்பந்தர் பாடுகிறார். சுந்தரர் தாம் பெற்ற பொன்னை இத்தல தீர்த்தமான மணிமுத்தா நதியிலே இட்டு, திருவாரூர்க் கமலாயக் குளத்திலே சிவபெருமான் அருளால் பெற்றதாகக் கூறப்படுகிறது.

நால்வரும் பாடிய தலம். ஸ்ரீ ஞானக்கூத்தரின் விருத்தாசலப் புராணம், சிவப்பிரகாசரின் பழமலையந்தாதி, பிக்ஷாடன நவமணிமாலை, பெரிய நாயகியம்மை விருத்தம் மேலும் கந்த புராணம், சிதம்பர புராணம், திருக்காளத்திப் புராணம். பழமலை வெண்பா போன்ற பல நூல்கள் இத்தலத்தின் பெருமைகளை எடுத்துரைக்கின்றன.

## 7. மதுரை (பாண்டிய நாடு)

சுவாமி : சொக்கநாதர், சோமசுந்தரர்
அம்பிகை : மீனாட்சி, அங்கயற்கண்ணி

பாண்டிய நாட்டின் தலைநகர். சிவபெருமான் 6 திருவிளையாடல்களைப் புரிந்த தலம். திருஞானசம்பந்த அனல் வாதம், புனல் வாதம் செய்து சமணர்களை வாதி வென்று சைவம் பரப்பிய திருநகர்.

'ஊருக்கு – மதுரை, கோவிலுக்கு – ஆலவாய்' எனவு முதுமொழி ஒன்றும் வழங்குகின்றது. மூர்த்தி நாயனா நின்றசீர் நெடுமாறன், மங்கையர்க்கரசியார், குலச்சிை நாயனார் முதலியோர் வரலாற்றுத் தொடர்புடைய தலம்.

"நெற்றிக்கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே என்று கூறிய நக்கீரர் 'கோபப் பிரசாதம்' என்ற நூலை இயற்றியதும் இத்தலமே. மூன்றாம் தமிழ்ச் சங்கம் அமை திருந்தவிடம்.

அப்பரும், சம்பந்தரும் பாடிய தலம். மேலும் பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடற் புராணம், பெரும்பற்றப்புலியூ நம்பியின் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் குமரகுருபரரின் மதுரைக் கலம்பகம், மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் போன்ற பல நூல்கள் இத்தலம் குறித்து எழுந்தவையே.

## 8. நெல்லை (பாண்டிய நாடு)

சுவாமி : நெல்லையப்பர்

அம்பிகை : காந்திமதியம்மை

இத்தலம் வேணுவனம் என்றும் வழங்கும். இத்தலத்தில் இறைவன் மூங்கில் அடியில் முளைத்ததுப் பற்றி அவர் திருநாமம் வேய் முத்தனென வழங்கும். சிவபெருமான் நிவேதனத்துக்குச் சேமிக்கப்பட்ட நெற்களஞ்சியத்தை வெள்ளமடித்துப் போகாமல் வேலிகட்டிக் காத்தமையால் இவ்வூர் 'நெல்வேலி' ஆயிற்று (திருநெல்வேலி). இன்றும் இவ்வூரைச் சுற்றி நெல்வயல்கள் வேலியாக அமைந்துள்ளன.

தாமிரபரணி நதிக்கரையில் உள்ள தலங்களில் தலைமைபெற்று விளங்குவது இத்தலமாகும். இலக்கண கொத்தின் ஆசிரியராகிய சுவாமிநாத தேசிகர் இத்தலத்தைச் 'சிவபுரம்' என்று குறிப்பிடுகிறார். சம்பந்தர் இத்தலத்தை,

மதுத்திவலை சிந்துபூந் துறைகமழ் திருநெல்வேலி
தென்றல்வந்துலவிய திருநெல் வேலி
செறிபொழில் தழுவிய திருநெல் வேலி
தேனில் வண்டமர் பொழிற்திருநெல் வேலி

என்றெல்லாம் இயற்கை வனப்போடு இணைத்துப் பாடி யுள்ளார்.

9. திருக்குற்றாலம் (பாண்டிய நாடு)

சுவாமி : குறும்பலாவீசர்
அம்பிகை : குழல்வாய்மொழியம்மை

இது உத்தாலக வனம் என்றும் வழங்கும். இத்தலத்திற்கு அகத்திய முனிவர் திருமால் உருவைக் குறுகச் செய்து சிவலிங்கமாக்கியதால், 'குற்றாலம்' எனவும், பலா விருட்சம் தலவிருட்சமாதலால் 'குறும்பலா' எனவும் பெயர் பெற்றது. இத்தலம் 'திரிகூடாசலம்' என்றும் வழங்கப்படுகிறது.

கோயிலின் குறிப்பிட்ட ஓரிடத்தில் நின்று காணும் பக்தர்களுக்கு விநாயகர், இலிங்கம், கோபுரம், மலை, வீழருவி ஆகிய பஞ்சதரிசனம் கிடைக்கும். அப்பர், சுந்தரர் பாடிய தலம். இங்குள்ள சாரல் நீர் வீழ்ச்சி சிறப்புடையதால் சுற்றுலா தலமாகவும் திகழ்கிறது.

தேவாரத் திருப்பதிகங்கள், திருகூடராசப்பக் கவிராயரின் தலபுராணம், திருக்குற்றாலக் குறிவஞ்சி முதலிய

17 நூல்களாலும் இத்தலத்தின் சிறப்பினை அறியலாம்.

## 10. பாவநாசம் (பாண்டிய நாடு)

| | | |
|---|---|---|
| சுவாமி | : | முக்காளலிங்கர், ஸ்ரீகலியாண சுந்தரேசுவரர் |
| அம்பிகை | : | உலகம்மை |

இது தேவார வைப்புத் தலமாகும். பொதிய மலையை அடுத்துள்ளது பாவ நாசம். அகத்தியர் இறைவனின் திருமணக் காட்சியைக் கண்டு களித்த இடமாகும். திருஞான சம்பந்தரும், திருநாவுக்கரசரும் தம் பாடல்களுள் பெயரளவில் குறிப்பிட்ட தலம்.

*பழக நானடிமை செய்வேன் பசுபதி பாவநாசா என்று* அப்பர் பாடுகிறார்.



# சைவ சதகம்

## காப்பு (நேரிசை வெண்பா)

தெய்வமெல்லா மாகித் திருவருட்கூத் தாடும்அரன்
சைவ சதகத் தமிழ்பாடக் – கைவனப்பும்
ஓர்மருப்புங் கொண்டோனு மொள்ளியவே
லேந்திநின்று
சூர்மடித்த வேளுந் துணை.

## 1. கலிவிருத்தம் (கனி கனி கனி மா)

இறைவாபர சிவனேவளர் ஏழக்குழல் பாகா
நறைவார்மலர் இதழித்தொடை நம்பாஎனை மறவேல்
நிறைவாயினை நீயென்றுணர் நேயத்தினர் தஞ்சீர்
அறைவார்ப்குடை மலியும்திரு அண்ணாமலை யானே

(1)

கூறாகிய கொடியோடொரு குளிர்மால்விடை
யதன்மேல்
நீறார்வடி விலகத்தினம் நீவந்தருள் செய்வாய்

வீறார்திரு மாலோடெழில் விதியுந்தொழும் விகிர்தா
ஆறார்சடை யத்தாதிரு அண்ணாமலை யானே

(2)

இல்லாள்ஒரு கைச்சேயுடன் இடம்மேவிட விடைமேல்
உல்லாசம் தாவந்தெனோ டொருவாசக மொழிவாய்
கல்லால்நி ழற்கீழுறு கருணாகர குருவே
அல்லால் பொழில் சூழுந்திரு அண்ணாமலை யானே.

(3)

என்பக்குவம் இழிவாம்எனில் என்னோடொரு
சொற்சொற்று
இன்பத்திடை விடுவாரென வின்னறகுவை தாலேன
வன்பர்க்கருள் செய்யாயென வந்தித்திடும் வாய்சேர்
அன்பர்க்கெளி யோனேதிரு அண்ணாமலை யானே

(4)

கனவில்திரு வுருவாவரு கருணைப்பெரு மான்நீ
நனவில்சின விடைமேல்வர நண்ணுந்தினம் என்றோ
பனகப்பணி புனைதோனுறு பரமாஉமை கணவா
அனல்வெற்பென நின்றாய்திரு அண்ணாமலை யானே

(5)

பஞ்சப்பிணி மிகலாலயர் பலருங்களி கூர்வான்
நெஞ்சத்துயர் உறுவார்தமை நீயெள்ளுதல் நெறியோ
வஞ்சத்தொரு தக்கன்றலை மாறப்பொரும் வலியாய்
அஞ்சக்கர் வாழ்வேதிரு அண்ணாமலை யானே.

(6)

கோலாகல மின் னார்மயல் கொண்டிங்குழல் வேனைப்
பாலாம்முழு நீறுற்றொளிர் பண்போருடன் வைத்தாள்
சேலார்விழி உமையாளொடு சினவெள்விடை
ஊர்வாய்
ஆலாலமி டற்றாய்திரு அண்ணாமலை யானே.

(7)

விசையற்கருள் செய்தாயென வினவித்துதி பகர்வேன்
வசைமுற்றலின் மெலியாதொரு வரமென்றிருள் வாயோ?
திசையிற்றிகழ் மறையோதிய சீர்குன்றினும் மூலகூடு
அசைவற்றொளிர் புகழ்சேர்திரு அண்ணாமலை யானே.

(8)

குகனைக்கரி முகனைப்புகழ் கொள்கைத்தவர் தம்மை
மகவிற்கரு திடுதொண்டருள் வாழ்வாயெனல் வம்போ ?

சகளத்துயர் வடிவிற்பல தழைதுன்றிட நின்றாய்
அகளப்பர சிவமேதிரு அண்ணாமலை யானே.

(9)

சமணர்க்கெம னெனவந்தருள் சம்பந்தனொ டோதும்
விமலத்தவ ரொருநால்வரும் மேவும்பதம் ஈவாய்
நிமலச்சிவ கதிநாடிய நெஞ்சாலுயர் வாருக்கு
அமலத்தனி முதலாவளர் அண்ணாமலை யானே.

(10)

## 2. எண்சீர் விருத்தம் (காய் காய் மா மா X 2)

நெடியானும் நான்முகனும் மகவான் றானும்
நெட்டுயிர்த்துக் கரங்குவித்து நிற்கும் முன்பில்
கொடியாருக் கெமனாகி மகிழும் பேற்றைக்
குறித்திறைஞ்சும வர்புடையிற் கூட்டி யாள்வாய்
பொடியாருந் திருமேனிப் புனித முக்கட்
புங்கவனே யானையுரிப் போர்வை யானே
வடியாரும் மூவிலைவேற் படைக்கை யானே
வளங்குலவு தில்லைமன்றில் வாழ்பெம் மானே.

(1)

சந்ததம்நின் றிருவருட்கே யாவல் பூண்டு
தவம்புரிவார் வேடமுற்றுந் தலைமேற் றாங்கி
வெந்தமனக் கயவர்களாத் திரிவார் தாமும்
மெய்யடியா ரெனக்கருதி மெலிந்தேன் கண்டாய்
அந்தரத்துத் தேவர்களும் நிலத்துள் ளாரும்
அநுதினமும் வாழ்த்தெடுக் கும்அரனே பொல்லா
மந்தகுணத் தார்சிறிதும் அறியொண் ணாதாய்
வளங்குலவு தில்லைமன்றில் வாழ்பெம் மானே.

(2)

காதார நின்புகழ்கேட் டுருகேன் உன்னைக்
கருதிநிற்கு மாதவரைக் காண மாட்டேன்
தீதார் தம்முகத்தில் விழிக்க நாணேன்
திருவருளுக் காசைகொண்டு திகைத்து நின்றேன்
வேதாள கணமாதி யாட ஆடும்
விகிர்தனே யாதிடத்தும் மேவி யல்லாய்
வாதாவி யுயிர்தடிந்தான் வணங்கும் பாதா
வளங்குலவு தில்லைமன்றில் வாழ்பெம் மானே.

(3)

சோறருந்தித் துயில்கூர்ந்து விழித்து முன்னோர்
சொன்னநூற் பொருள்கெடுக்குந் தொடக்கர்
தம்மாற்

கூறணைந்த மங்கையொடு விடைமேற் கண்டுன்
குரைகழல்கள் வாழ்த்துநலங் குறிக்கப் போமோ
நீறணிந்த செங்கனற்குன் றனைய மேனி
நிருத்தனே விழியிலங்கு நெற்றி யானே
மாற்றரிய வினையிரண்டுந் தவிர்க்க வல்லாய்
வளங்குலவு தில்லைமன்றில் வாழ்பெம் மானே.

(4).

வெள்விடும்பூங் கணைவெதும்பத் தளரா நாயேன்
விரும்பியுன்பொற் கழல்பாடி மெய்ய ராவார்
தாள்விளங்குந் தலையோனென் றுலகோர் ஏத்தும்
தனிப்புகழ்வேட் டுழல்வதுவுஞ் சரதம் அன்றோ
தேள்விடம்போற் குணமுடையார் புறங்கண் மூன்றுஞ்
சிரித்தெரித்த வாயானே சிவபி ரானே
வாள்விடுத்துத் தக்கனுடற் கூறு கண்டாய்
வளங்குலவு தில்லைமன்றில் வாழ்பெம் மானே.

(5)

வீரனாத் தக்கனது வேள்விக் கேகி
விபுதர்கோன் அயன்றிருமால் வெருளத் தாக்கி
பாரமால் வரையின்முன்போல் அமர்ந்தாய் என்று
பலநூலுஞ் சொலக்கேட்டும் பரிவு தீரேன்
சேரனார்க் கொருபரியும் ஆரு ரற்குத்
திரள்பணைக்கை வேழமொன் [illegible]

மாரவேள் பொடியாக விழித்த கண்ணா
வளங்குலவு தில்லைமன்றில் வாழ்பெம் மானே

(6)

நல்லவரென் றுலகுணரத் தோன்றி நின்று
நவையிருக்கும் இடமாகி ஞானம் பேசும்
புல்லர்கட்கு மனநாணுந் தமிய னேனுன்
பொன்னடிகண் டிறுமாக்கும் பொழுதொன்
றுண்டோ
சொல்லரிய நான்மறையும் பரவ நின்றாய்
சூகரத்தின் வெண்கோடும் தோளிற் பூண்டாய்
வல்லவுணர் குடிகெடுக்கப் புவித்தே ரூர்ந்தாய்
வளங்குலவு தில்லைமன்றில் வாழ்பெம் மானே.

(7)

பார்த்தனுக்கன் றருள்புரிந்த துண்மை யானாற்
படியிடத்தி லிந்நாளோர் பத்தன் றன்னைச்
சீர்த்தமெய்ப் பேறுடையவனாச் செய்வித் தெங்கள்
சிறுமையெல்லாந் தவிர்த்தறிவிற் சேரச் சேர்ப்பாய்
சூர்த்தவிழிப் பேயினத்தோ டாடி நின்றாய்
துதிகூறாய் காணரிய சொருபத் தெந்தாய்
வார்த்தடம்பூண் முலையுமையாள் பாகத் தானே
வளங்குலவு தில்லைமன்றில் வாழ்பெம் மானே.

(8)

ஆனைமுக முடையானுங் கதிர்வே லேந்தி

அவுணர்குலம் வேரறுக்கும் அடற்றோ ளானும்

தேனைநிகர் மொழியுமைப்பால் முலையுண் டாற்போற்

சிறியேனும் அருந்தியுய்யச் செய்வாய் கொல்லோ?

சோனைமுகிற் றிருமேனி நெடுமால் போற்றச்

சுடராழி யொன்றளித்தாய் தூவெண் ணீற்றாய்

வானையளா வியசிகரி சூழுங் கோயில்

வளங்குலவு தில்லைமன்றில் வாழ்பெம் மானே.

(9)

பொய்வழக்கர் கழுவேறப் படித்தோ னாதிப்

புனிதஉரு நால்வரொடு புகலத் தக்க

மெய்வலியோ னொருவன்வந்து தவத்தை ஒவ்வார்

வெறுவாயின் மண்ணடைக்க விழைந்தேன்

கண்டாய்

பைவனப்புப் பணியணிந்து நிருத்தஞ் செய்யும்

பழையோனே ஆயிரத்தெண் பதிதோ ளுற்றாய்

மைவளருந் திருமிடற்றெம் மிறைவா வுண்மை

வளங்குலவு தில்லைமன்றில் வாழ்பெம் மானே

(10)

## 3. கொச்சகக் கலிப்பா (4 காய்ச் சீர்கள்)

பற்றுநிலை தெரியாது பரிதவிக்குந் தமியேனைக்
கற்றுணையாய் அஞ்செழுத்து நவின்றுய்யப்
பணித்தாள்வாய்
சுற்றுநெடுஞ் சடைகாட்டிற் தூயமதி யணிந்தோனே
கற்றுணர்ந்தோர் பரவிதிருக் காளத்தி மலையானே.

(1)

ஊனருந்தி யருளினையென் றுயர்ந்தோரும்
உரைத்தாலு(ம்)
நாதனை யொருவாறா நவின்றிருப்ப தறியாயோ
வானகத்தார் விளையாடி மகிழ்கூடும் மலர்ப்பொழிலிற்
கானமயி லாடுதிருக் காளத்தி மலையானே.

(2)

உண்ணவில்லி அன்றளித்த தூனன்று கனியேயென்(று)
எண்ணறிவு நல்கியநீ யிசைந்துரைக்க மாட்டாயோ
விண்ணவர்க்கா விடமருந்து மெய்யையன்று
பொய்யென்றாய்
கண்ணனென நீண்டதிருக் காளத்தி மலையானே.

(3)

ஊரூர்க டொறுமேகி புழலுமெனக் குணர்வுநல்கிச்
சீரூருங் கமலமலர்ச் சேவடியிற் சேர்த்தருள்வாய்
வாரூரு(ம்) முலைப்பேதை மருங்கிருக்க மகிழ்வோனே
காரூர விளங்குதிருக் காளத்தி மலையானே.

(4)

குயில்போலு(ம்) மொழியாரைக் குறித்துமிக மெலிவேற்கு
வெயிலாரும் உலகமுற்றும் விரும்புநலந் தருவாயோ
எயின்மூன்றும் பொடியாக்கி யிமையவருக்
கருள்செய்தாய்
கயிலாய மனையதிருக் காளத்தி மலையானே.

(5)

வேதனுக்குந் திருமாற்கும் விண்ணவர்க்கும் விருப்பாய
பாதமலர்க் குயர்வோதாப் படிறரையான்
பகைக்கின்றேன்
கோதகல்நன் நெறியோர்பாற் குருவாகி வருவோனே
காதலெல்லாம் உதவுதிருக் காளத்தி மலையானே.

(6)

நாணமின்றி நின்னடியார் நடுவிருக்க முயல்வேனை
வீணனெனப் பலரேச மெலிந்துழல விடலாமோ
ஆணவமா தியமூன்றும் அறுப்போனே யருவினையோர்
காணரிய தாயதிருக் காளத்தி மலையானே.

(7)

எய்யாது சமராடு மெழில்விசையற் கிரங்கியநீ
ஐயாவென் றரற்றுமெனக் கருள்புரிய லாகாதோ
மையாரும் பொழிலிடத்து மரமுறித்து விளையாடுங்
கையானை யுலவுதிருக் காளத்தி மலையானே.

(8)

சுருங்குபுழைக் கையோனும் சூர்ப்பகையும் எனநானுன்
மருங்குறைதற் பெறநாடி வருந்துவதும் அறியாயோ
நெருங்குபூண் முலைபாகா நெடுஞ்சூலப் படையோனே
கருங்குறவர் மல்குதிருக் காளத்தி மலையானே. (9)

வானார்க் கெய்தரிய வாழ்வடைந்த வொருநால்வர்
தேனாறுந் தமிழோடென் சிறுபனுவற் புனைவாயோ
மானானை புலியாதி மறிதிரையிற் றடுமாறுங்
கானாறு மலிந்ததிருக் காளத்தி மலையானே.

(10)

## 4. அறுசீர் விருத்தம் (4 காய் மா தேமா)

ஆலால சுந்தரனார் பரவையார்
மயற்கடலில் அழுந்தக் கண்டு
காலாலும் நடந்துசென்று தூதரைத்தாய்க்

கெனதுகவி கசப்பாங் கொல்லோ
பாலாழித் துயில்கூரும் விழியணிந்த
பதத்தானே பவளம் போல்வாய்
சேலார்கண் உமையிருந்த பங்கனே
திருவாரூர்ச் சிவபி ரானே.

(1)

மங்கைநல்லார் இன்பநுகர் புலவருக்கும்
வேண்டியவா வழங்கு நின்சீர்
கொங்கைமய லொழிப்பார்க்காம் பணிவிரும்பும்
எனையாண்டாற் குறைந்து போமோ
அங்கைநெடுங் குன்றுரித்தாய் அறுகிதழி
நதிமதிநீர் அரவம் பூண்டு
செங்கையின்மான் மழுச்சூலம் எடுத்தோனே
திருவாரூர்ச் சிவபி ரானே.

(2)

புங்கமிகு செந்தமிழால் உனைத்துதிக்குந்
தமியேனைப் பொல்லார் ஏசிப்
பங்கமுறச் செய்யாமற் பொருட்பேறோ
டருட்பேறும் பாலித் தாள்வாய்
கங்கணமாக் கணபணக்கட் செவியணிந்த
பெருமானே கண்மூன் றுள்ளாய்

செங்கமலை வழிபடலாற் சிறந்திலங்குந்
திருவாரூர்ச் சிவபி ரானே.

(3)

நின்கோவிற் றொகுதிகட்காம் பணிகளெல்லாந்
தழைவுறுநன் நெறிசற் றோரார்
வன்கோலார் இரத்தவெள்ளக் கடல்நீந்து
மொருவீரன் வருநா ளென்றோ?
நன்கோதித் தெளிந்தடங்கும் நலமுடையார்க்
கினியோனே நாரி பாகா
தென்கோனைத் தடிந்தமலர்த் தாளானே
திருவாரூர்ச் சிவபி ரானே.

(4)

பெற்றாளை யொருமலடி மகவருமை
யுணர்தியெனப் பேசல் போல
முற்றாண்மைப் புலவரெதிர் முதிர்தமிழ்ச்சீ
ருணராதார் முழங்க லாமோ
பொற்றாள மொருபுலவற் களித்தோனே
யழியாத பொறிமிக் குள்ளாய்
சிற்றாவிக் குறுதுணையாம் பெருமானே
திருவாரூர்ச் சிவபி ரானே.

(5)

அங்கோங்கு மலர்மொக்குள் அனையமுலைக்
கரும்பாவை அனைய தாயார்
பங்கோவற் றுறையுமெந்தாய் விடைப்பரிமேல்
உனையொருகாற் பார்ப்பேன் கொல்லோ
பொங்கோதக் கடல்கடைந்தோன் வழிபடும்பொற்
பதத்தானே பொருவி லாத
செங்கோலக் கிரியனைய பெரியோனே
திருவாரூர்ச் சிவபி ரானே

(6)

முன்னமொரு புலவனுக்குப் பொருள்கொடுத்துக்
கவிகேட்ட முதல்நீ யானா(ல்)
உன்னடியா ரடியார்மேல் உனக்கான
எனதாசை ஒருங்கு தீர்ந்தாள்
புன்னகையாற் புரமெரித்த புண்ணியனே
தமிழுதித்த பொதிய நாட்டுத்
தென்னவர்க்கும் எய்தரிய சேவையாய்
திருவாரூர்ச் சிவபி ரானே.

(7)

விசையாக நாணொலித்துச் சரமாரி
பொழியுமொரு வில்லிக் கந்தாள்
வசைதீர்ந்த பாசுபதங் கொடுத்ததுண்டே

லெனக்குமொரு வடிவே லிவாய்
கசைதாங்கி விடைநடத்துங் கறைமிடற்றெம்
பெருமானே கற்றோர் கூறுந்
திசையாய வொருபதுதோ ளுடையானே
திருவாரூர்ச் சிவபி ரானே.

(8)

நம்பியுனைப் போற்றிசைக்கு மெமையிகழ்ந்து
விடுவாயேல் நரர்பொன் மேனித்
தும்பியொடு முருகோனைப் பாராயோ
வுலகிகழ்ந்து சொல்லி டாதோ
வெம்பிவரு கொடுங்காலன் றனைக்காலா
லுதைத்தோனே மேரு வேந்தித்
தெம்பின்ஆர்த்த தானவர்மேல்
படையெடுத்தாய் திருவாரூர்ச் சிவபி ரானே.

(9)

சம்பந்த முனிமுதலா மொருநால்வர்க்
கருளியசீர் தாரா யாகில்
வெம்பதந் தவிர்ந்தமுத்தி யளவிலார்க்
களித்ததெல்லாம் வெறும்பொய் யாமோ?
கும்பங்க ளுறுமயிரா வணத்தானே
யிடபநெடுங் கொடிப்பெம் மானே.

செம்பஞ்சிற் றிகழ்மலர்த்தாட் பிடிபாகா
திருவாரூர்ச் சிவபி ரனே.

(10)

## 5. அறுசீர் விருத்தம் (விளம் மா தேமா X 2)

முன்னிலை யாக நின்பேர்
மொழிந்துயிர் விடுத்த சில்லோர்
உன்னிய வாறு தோன்றா
தொளித்ததே னுரைக்க வேண்டும்
பொன்னிகர் கடைமேற் கொன்றைப்
பூவொடு மதியும் பூண்டாய்
சென்னியோ ரைந்து கொண்டாய்
திருவானைக் காவ லானே.

(1)

வெம்புவா ளரவே போல
விளங்குசீர் அல்குன் மின்னார்
கொம்புநேர் முலைப்போர் வேண்டிக் கு
லைவதோர் கொடுமை யன்றோ
பைம்புலுண் பவைகொன் றுண்பார்
பலநெறிக் கிடையூ றாவாய்

சிம்புளா வொருக்காற் சென்றாய்
திருவானைக் காவ லானே.

(2)

அறக்கொடுந் துயரஞ் செய்தே
யமரை வருத்தச் சோம்பா
மறக்குணத் தகுவர் தம்மேன்
மழுப்படை யெறிந்த துண்டோ?
சிறக்குநீர்ப் பொன்னி நாட்டோர்
செய்தவப் பயனா நின்றாய்
திறற்கரி யுரித்துப் போர்த்தாய்
திருவானைக் காவ லானே.

(3)

வரைப்பொரு நெடுந்தோள் வீரர்
வணங்கிய மாய னந்தாள்
விரைப்படு மலர்க்கண் சாத்தி
வேண்டல்கண் டருளி லயோ
நரைப்புறு விடையி லேறு
நம்பனே நல்லாள் பாகா
திரைப்புனற் பொன்னி சூழுந்
திருவானைக் காவ லானே.

(4)

மங்கலை யிருந்த பாகா
　　மால்விடைக் கொடிகொண் டோனே
சங்கரர் வென்று போற்றுந்
　　தவமெனக் களித்தா யன்றோ
தங்கமால் வரையில் வாழுந்
　　தனிப்பரம் பொருளே வெள்ளைத்
திங்களை முடிமேல் வைத்தாய்
　　திருவானைக் காவ லானே.

(5)

நாயினேன் பகரும் பாடல்
　　நலமிலா தனவென் றாலும்
நீயிசைந் தணிந்து வேண்டு
　　நெறியளித் தருளொண் ணாதோ
பேயினத் தொடுநின் றாடும்
　　பித்தனே முத்தர் பேறே
தீயினுஞ் சிவந்துள் ளோனே
　　திருவானைக் காவ லானே.

(6)

முருக்கிதழ் அனைய வாயார்
　　மோகமும் புலையுந் தீர்ந்து
கருக்குழி தூர்த்த வல்லார்க்

காணவும் பெற்றி லேனே
தெருக்கடோ றேகி ஏற்றுத்
தினந்தினந் திரியுஞ் செல்வா
செருக்குவின் மதனைச் செற்றாய்
திருவானைக் காவ லானே.

(7)

அளிமுரல் இதழி யாதி
அருச்சுணன் போல்நின் றாளில்
எளியனேன் அணிந்து வாழ்வான்
இரங்குநீ ரில்லாய் கொல்லோ
நளினமா மலரோன் சென்னி
நற்கல மாகக் கொண்டாய்
தெளிபுனல் வாவி சூழுந்
திருவானைக் காவ லானே.

(8)

தாமரை யிலையே யன்ன
தழைசெவிக் கடவு ளானும்
காமற்வேற் குகனும் போலக்
கடையனேன் மகிழ்வ தென்றோ
கோமளக் களபக் கொங்கைக்
கொடியடை குலவும் பாகா

தேமலர்ப் பொதும்பர் நீடுந்
திருவானைக் காவ லானே.

(9)

பொய்யில்சீர்ப் புலவர் போற்றும்
புகலியோன் முதலா நால்வர்
வையினுங் களிக்கு நின்சீர்
வழுத்துநீர் மலியச் செய்தாய்
மையினந் தவழுஞ் சோலை
வளைதரக் கிடக்குந் தெண்ணீர்ச்
செய்யிடைக் கமலம் பூத்த
திருவானைக் காவ லானே.

(10)

## 6. காப்பியக் கலித்துறை
## (மா விளம் விளம் விளம் காய்)

கனிவு றாதநெஞ் சுடையநான் வனைதரு கவிமாலை
இனிய வல்லவே யாயினும் புனைந்தரு ளிசைத்தாள்வாய்
மனித னேயெனத் திருவுருக் கொள்ளவும் வல்லானே
முனிவர் சேகர மலிதரு பழமலை முதியோனே.

பத்த னார்மிடிக் கனல்கெடப் பொருட்குவை பரிந்தீந்த
சித்த னீயெனத் தெளிந்துனைத் துதிப்பது தெரியாயோ
சுத்த நீறணிந் தாடிய வொருத்தனே நுகளிறு
முத்த மாநதித் தென்கரைப் பழமலை முதியோனே.

(2)

தொண்ட ராலுனக் கெய்திய புகழ்க்கடல் சுவராமே
அண்டர் போற்றுமெய் யருட்செயல் சிறிதெனக்
களித்தாள்வாய்
வண்டர் வாழெயில் பொடிபட நகைசெய்தாய்
மறையோது
முண்ட காசனன் றுதிசெயும் பழமலை முதியோனே

(3)

தேவர் வாழ்க்கையுஞ் சிறிதென நின்னருட்
செயல்வேண்டும்
ஆவ லீந்தனை யருந்துயர் விளைப்பதால் அயர்வுற்றேன்
தூவல் சூடிய துவள்சடைப் பரமனே தொலைவில்லாய்
மூவ றீர்வளங் குலவிய பழமலை முதியோனே

(4)

கழங்கு லாவுகைச் சிறுமியர் மொழியினுங் களிப்பேனை
மழங்கொண் மால்விடைப் பரியில்வந் தாளவும்
வல்லாயோ
கிழங்க றாநெடுஞ் சாரலில் வேடுவர் கிளையோடு
முழங்கு தண்புன லருவிசூழ் பழமுலை முதியோனே.

(5)

சித்தி யாவுநின் றிருவருட் செயலெனத் தெளிவேனைப்
புத்தி யின்றிய சிற்சில ரிகழ்வதும் பொறுக்கின்றாய்
பத்தி நன்னெறி யொழுகிய தொண்டரைப் பணிவார்க்கு
முத்தி வீட்டினு மினியதாம் பழமலை முதியோனே.

(6)

செக்கர் போலுநின் றிருவுரு எதிர்வரத் தினம்நாடார்
பொக்க மாயையைக் கடந்தன மெனச்சொலிற்
புலரேனோ
நக்க னேயொரு நான்மறை யறிவரு நடமாடும்
முக்க ணாயக னேயெழிற் பழமலை முதியோனே

(7)

இடிகள் அஞ்சுபே ருடையவற் கருள்செயும்
எந்தாயென்று
அடிய னேன்றுதித் தரற்றனின் செவிப்புலம்
அணுகாதோ

கொடிகு லாவுறு மிடத்தனே மான்மழுக் கொண்டோனே
முடிவி லாநலந் தரத்தகு பழமலை முதியோனே

(8)

பெருகு மும்மதத் தொருவனுங் குமரனும் பெறநாடும்
ஒருக னிக்கிதே பொருளெனத் தெளிந்துளா
ருடன்சேராய்
விருக மோரிரண் டுரித்தகைப் புனிதனே விடைப்பாகா
முருக றாமலர்ப் பொழில்மிகு பழமலை முதியோனே

(9)

ஒடு நீரிலே டெதிருறப் புரிந்தவ னொடுநால்வர்
பாடு முத்தமிழ்க் கிரங்குநீ யருட்கணாற் பாராயோ
தேடு மாலய னறியொணா வடிமுடிச் சிவலோகா
மூடு மாமுகி லிடையறாப் பழமலை முதியோனே

(10)

## 7. கலிவிருத்தம் (விளம் விளம் மா விளம்)

பொன்னுடன் கலைமகள் புணரப் பெற்றபின்
னுன்னுணர் வெய்திவீ டுறுவ தார்கொலோ
மின்னுறழ் செஞ்சடை விரிக்கும் வேதியர்
மன்னுதண் டமிழ்வளர் மதுரை மன்னனே

(1)

தீயவல் லமணர் முன்செய் ததீமெலாஞ்
சேயவ னொருவனாற் செகுத்த தில்லையோ
தூயசங் கணிகுழைச் சோதி யேநெடு
மாயவர் மலர்தொழும் மதுரை மன்னனே

(2)

வேதிய னொருவனை வெறுப்ப துன்னெனக்
காதினர் தங்களைக் கறுவ லெற்றையோ
நீதிசேர் மதிக்குல நிருபன் முன்செயும்
வாதினாற் சமண்கெடு மதுரை மன்னனே

(3)

நெஞ்சகத் தொருவிதம் நினைத்து வேறுசெய்
பஞ்சபா தகர்வலி பாறச் செய்வையோ
நஞ்சையின் றமரர்தந் நடுக்கந் தீர்த்தவா
மஞ்சடர் கடம்புசூழ் மதுரை மன்னனே

(4)

செய்யைதன் கேள்வனிற் சிறந்து மாமயற்
பொய்யைவென் றுன்னடி புனைதல் வேண்டினேன்
கையைநே ரலைகளாற் கரையின் முத்தெறி
வையையாற் றணிதிகழ் மதுரை மன்னனே

(5)

இகல்வலி கருதிமிக் கிடையு நாயினேன்
அகமெலி வகற்றிநின் னருளை நல்குவாய்
சகலர்கண் டிறைஞ்சொணாத் தகைகொண் மேனியா
மகபதி பரவுசீர் மதுரை மன்னனே

(6

ஊறிலார் தம்மையு மோருங்கு வையும்நான்
ஈறிலா மெய்யரு ளிடத்திற் றோய்வனோ?
நீறிலா நெற்றியோர் நிந்தை யாளனே
மாறிலா வளத்திரு மதுரை மன்னனே.

(7

செங்கரும் பினனெத் திகழ்கி ரீடிமுன்
வெங்கணைக் கானவர் வேடங் கொண்டதேன்?
அங்கணா மழுப்படை யவிர்ந்த செங்கையாய்
மங்கலம் பெருகுதென் மதுரை மன்னனே.

(8

பேழைநேர் வயிற்றனைப் பிறங்கும் வேலனை
ஏழைபங் குடையநீ யீன்ற தில்லையோ
மாழையங் கிரியைமுன் வளைத்த வண்மையாய்
வாழைமேல் வளைதவழ் மதுரை மன்னனே.

(9

கலக்கமில் கவுணியக் கவிஞ னாதியாம்
இலக்குறு நால்வரை யெண்ணி யேங்கினேன்
துலக்கமார் வெண்பொடி துதைந்த மேனியாய்
வலக்களி றகமகிழ் மதுரை மன்னனே.

(10)

## 8. அறுசீர் விருத்தம் (மா மா காய் x 2)

கோலம் அழுபோற் குணம்பொருந்திக்
குலவக் கருதிக் குலைவேனைச்
சீல முனிவ ருடன்சேர்த்துன்
றிருத்தாட் பணியே செயச்செய்வாய்
ஆல மிடற்றெம் பெருமானே
யடியா ருயிருக் காருயிரே
நீல மலருந் தடஞ்சூழு
நெல்லை யூரின் நிருமலனே

(1)

பாடுந் தமிழுக் கிரங்குவதும்
பணிவார் நினைவிற் கிசைவதுவும்
வாடுந் துறவோர்க் கருட்பேறு
வழங்கு வதுவும் மறந்தாயோ

தேடும் அயன்மாற் கரியோனே
    தெண்ணீர்ப் பொருநைத் திருநதியாய்
நீடுங் கழைமால் வனமாய
    நெல்லை யூரின் நிருமலனே

(2)

தீய னொருவ னிறுமாந்துன்
    றிருமுன் பதனிற் சிலசெயலாற்
காய மெலிவுற் றுழன்றேன்பாற்
    கனவி லொருசொற் கழறிலையோ?
தூய நீறு முதலாகத்
    துலங்கு மூன்றுந் தொடுமவர்பால்
நேய முடையார் பலர்வாழு
    நெல்லை யூரின் நிருமலனே.

(3)

மறையோன் றிருமான் முதலானோர்
    வருந்தித் துதித்து வணங்கிடுஞ்சீர்
குறையா மலர்த்தாள் விரும்பாத
    கொடியே னின்னைக் கூடுவனோ
பிறைசேர் சடிலப் பெருமானே
    பேயோ டாடும் பெரியோனே
நிறைநீர்க் கழனிப் பெருவேலி
    நெல்லை யூரின் நிருமலனே

(4)

கூண்ட பெரியோர் புடைநடுவிற்
        குறுகு நலமே குறித்துன்னை
வேண்ட லொழியாத் தமியேனுள்
        விடைமீ தொருக்கால் விளங்கிலையோ
வாண்ட முதல்வா மறையுணரா
        வருமைப் பொருளே யடன்மழுவாய்
நீண்ட வழுதி புகழ்விளங்கு
        நெல்லை யூரின் நிருமலனே

(5)

அறிவிற் கறிவா முனைக்கருதா(து)
        அகிலத் துழல்வா ரகநாணக்
குறியிற் றினநின் றுனைக்கூடிக்
        கொல்லா விரதம் விளைப்பேனோ
மறியைப் பரசோ டணிந்தாடும்
        வரதா முதியோர் வகுத்தபல
நெறிமுற் றுணர்வார் மருவுதிரு
        நெல்லை யூரின் நிருமலனே

(6)

கல்லா லடியி லினிதிருந்த
        கரணை குரவா வெனக்கூவி
எல்லா நலமும் பெறவிழைந்தேன்

இரங்காது இகழில் என்செய்வேன்
கொல்லா நெறியே யுயர்ந்ததெனக்
கூறும் பெரியோர் குறித்தபடி
நில்லா ருணர்தற் கரியோனே
நெல்லை யூரின் நிருமலனே

(7)

தைத்த கருணையோ டடைந்ததொரு
தனிச்சூ கரத்துக் கிரங்கியவன்
வைத்த சிலையா லடித்திடற்கு
மகிழ்ந்த கருணை மாறியதோ
பொய்த்த மலரை வெறுத்தோனே
புரமூன் றெரித்த புன்னகையாய்
நெய்த்த விதழி மலர்த்தொடையாய்
நெல்லை யூரின் நிருமலனே

(8)

களிற்று முகனுங் குகவேளுங்
கருதுங் கனியிற் சிறிதெனக்கும்
அளிக்க வேண்டு மெனத்துதிக்கு
மருமைக் குணந்தோய்ந் தவராரோ
துளித்த மதுப்பூங் கடுக்கையணி
தோளா வொருமுச் சுடர்விழியாய்

நெளிக்கும் பயிமிக் குடையானே
        நெல்லை யூரின் நிருமலனே

(9)

புகலி நகரோன் முதலாகப்
        புகலு மொருநாற் புலவருக்குஞ்
சகல நலமு மருளியநீ
        தமியேற் கிரங்கத் தருணமிதே
ககன மதிபோன் முகமுடைய
        காந்தி மதிப்பெண் மணவாளா
நிகரி லாத வளங்குலவு
        நெல்லை யூரின் நிருமலனே.

(10)

## 9. கலிநிலைத்துறை
## (காய் காய் காய் காய் கனி)

கழலார்தி ருத்தாள்வி ரும்பித்து தித்துக்க ரங்கூப்புவேன்
மழமால்வி டைக்குன்றில் வந்திங்கெ னக்கான
                                        வரம்நல்குவாய்
தழல்மேவு செங்கைப்பி ரானேவெ ளிற்றென்பு
                                        தலைமாலையாய்

குழல்வாய்மொ ழிப்பேதை பங்காள னேதிருக்
குற்றாலனே

(1)

இன்றைக்கு நாளைக்கெ னத்தேடி வாடாதெ
னக்கானதோர்
நன்றைக்கொ டுத்துனை நம்பும்ப டிக்குண்மை
நவில்வாய்கொலோ?
வென்றைக்கு மாயாதி ருக்கின்றவா முக்க
ணிறைவாமலர்க்
கொன்றைத்தொ டைத்தோள்க ளெட்டுள்ள வாதிருக்
குற்றாலனே

(2)

போராடும் வஞ்சப்பு லப்பேய்க ளானெஞ்சு
புண்ணானநான்
வாரார்மு லைப்பேதை யோடுன்ற னைக்கண்டு
மகிழ்கூர்வனோ
தேராமெ னத்தென்ற லூர்வானை முன்செற்ற
செங்கண்ணனே
கூரார்நெ டுஞ்சூல மணிகைய னேதிருக் குற்றாலனே.

(3)

வம்பர்க்கி டுக்கண்கொ டுத்துன்ற னக்கான
வழிபாடுசெய்து
உம்பர்க்கு மானந்த முய்க்குந்தி றன்றேட
லுயர்வல்லவோ?
கம்பக்க ளிற்றாளர் பலரேன்பு மாலைக்க ழுத்தண்ணலே
கும்பத்தில் வந்தோன ருச்சித்தி டுந்திருக் குற்றாலனே.

(4)

தேர்மன்ன ருக்கும்ப யந்தொஞ்சி டாதுன்செ
யற்பாடுவார்
நேர்மன்னி நிற்கும்பெ ருஞ்சீரெ னக்கென்று
நீநல்குவாய்
கார்மங்கை பாகத்த ருட்குன்ற மேயழற் கையர்நெடுங்
கூர்மத்தி னோடும்பு னைந்தாடு வாய்திருக் குற்றாலனே

(5)

செங்காவி யொருக்குங்கண் மானாரை வெல்லுந்தி
றற்றேடிவாடு
எங்காத விற்சற்றும் நல்காய னிற்றுன்ப மென்செய்யுமோ
கங்காள மாடப்ப ணிப்பொங்க மாடக்க ளித்தாடுவாய்
கொங்கார்க டுக்கைச்ச டைக்காவ லாதிருக்
குற்றாலனே

(6)

பாடாம றைக்குட்ப யன்றேடி நிற்கின்ற
பண்போர்களிற்(று)
ஆடாண்மை நாடித்த வஞ்செய்யு நல்லோர்த
மைச்சேர்வனோ
வீடாம தற்கான வித்தன்ன சொற்சொல்லு
மெய்த்தேசிகா
கூடார்பு ரஞ்சுட்ட வல்லாள னேதிருக் குற்றாலனே

(7)

வில்லால டித்தோனு வப்பாக வுஞ்செய்த வேடாவெனச்
சொல்லாது வாணாள்க ழிக்கின்ற வென்னைத்தொ
டர்ந்தாள்வையோ?
பொல்லாத காலன்ற னைச்செற்ற சீர்துன்று
பொற்பாதனே
கொல்லநெ றித்தொண்டர் நேயத்த னேதிருக்
குற்றாலனே.

(8)

விடுமதத் தாரைக்க ளிற்றுக்கும் வேலற்கும்
வெண்ணீறெடுத்
திடும்மலர்க் கைகொண்டெ னைத்தொட்ட ணைத்தாள்வ
தெந்நாள் கொலோ?
கடுவிருக் குங்கறைக் கண்டத்த னேநுதற்
கண்ணத்தனே

கொடுவரித் தோலொன்ற சைத்தாடு வாய்திருக்
குற்றாலனே.

(9)

மேலாய மெய்வீட டைந்தோர்க னால்வர்க்கும்
வெண்மேனியுஞ்
சூலாயு தக்கையு மாவந்த நீயின்று தோன்றாததேன்
மாலார ணன்றேவர் கோனாதி யோர்கெஞ்சு
மணிகண்டனே
கோலாக லச்சித்த வேடங்கொள் வாய்திருக் குற்றாலனே

(10)

## 10. எண்சீர் விருத்தம்
## (மா விளம் மா விளம் X 2)

நின்ன ருட்பெருங் கடல்கு ளித்துளார்
நெறிமு யன்றிலென் நினையு னர்ந்திலேன்
அன்ன வர்க்குள்மிக் குயர்வு ளாரையொத்து
அவிர்கை நாணிலேன் அஞ்ச லென்றிடாய்
அன்ன வாகனத் தயனும் மாறும்முன்
அறியொ ணாதவெற் பான வானவா
பன்ன கப்பெருக் கணியும் மேனியாய்
பழுதில் சீருடைப் பாவ நாசனே.

(1)

கற்ப கத்தருட் கடவு ளாதியோர்

கைத்தொ ழுந்தனிக் கறைமி டற்றனைச்

சொற்ப னத்தினிற் கண்டு ளோமெனச்

சொல்லு வார்களைத் தொழலு மெய்திலேன்

அற்ப டுங்குழற் கவுரி பாகனே

அன்பர் நெஞ்சகத் தாடு மண்ணலே

பற்ப லர்க்கருட் புரியு மீசநே

பழுதில் சீருடைப் பாவ நாசனே.

(2)

செங்கண் மாயனுக் காழி தந்தநின்

றிருவ டித்துணைச் சீர்வி ரும்பு(ம்)நான்

இங்க ழுங்கிடற் கண்டு நீயெனக்(கு)

இன்ப நல்கிலா(ப்) யாது செய்குவேன்

மங்க ளாகரப் பேதை பாகனே

மழுவை மானுடன் வைத்த கையனே

பங்க யாதனன் றலைய றுத்தவா

பழுதில் சீருடைப் பாவ நாசனே.

(3)

ஆவ தைக்குநெஞ் சஞ்சு றாதபேர்

அனைவ ருங்கெடற் கான மாதவம்

பூவ கத்தினிற் செய்யும் வண்மையோர்

புலவர் கோனிலும் புனித ரல்லவோ
காவ லிற்சிறந் துள்ள மாயனுங்
கமல வேதனுங் கருத நின்றவா
பாவ னைத்தொழிற் கமைவு நின்றவா
பழுதில் சீருடைப் பாவ நாசனே.

(4)

பூச னைத்தொழிற் புரியு மன்பர்தம்
புந்தி யெண்ணமே போல்இ யற்றுவர்ய
மாச டைந்தபுன் னெஞ்சி னேனையோர்
வழிந டத்திமெய் வாழ்வில் வைத்திடாய்
காச கன்றபே ராடல் செய்தபொற்
கழல்க லாலருட் கடல்வி ளைப்பவா
பாச நோயறக் களையு நம்பனே
பழுதில் சீருடைப் பாவ நாசனே.

(5)

ஈயு நற்குணஞ் சிறிது மேய்திடா
ஈனர் தம்பொருட் கிச்சை கொள்வதால்
ஆயு மென்றனைக் கருணை யாலளித்
தன்ப ரோடுவைத் தாள வல்லையோ
காயும் வெஞ்சினப் புலியு ரித்தடற்
கரியு ரித்தகைக் கடவு ணாயகா

பாயு மால்விடைப் பரியி லேறுவாய்
பழுதில் சீருடைப் பாவ நாசனே.

கொச்சை வாயுடைச் சிதடர் தம்முடன்
கூடி டாத நற் கொள்கை தந்தநீ
கச்சை வென்றபூண் முலைமி னார்தருங்
காத னோயறக் களைவ தெற்றையோ
பிச்சை யுண்டவன் பேயொ டாடிடும்
பிஞ்ஞு காநரைப் பெற்ற மேறுவாய்
பச்சை மேனியாள் பங்கி னின்றவா
பழுதில் சீருடைப் பாவ நாசனே.

(

நன்றி கொன்றிடத் துணியு முடரை
நாயி லென்புதோ னண்ணு வார்களைத்
தென்றி சைத்திறற் கடவு ளூர்ப்புகச்
செய்யும் வீரரைச் சிறிய ரென்றிடேன்
வென்றி மாயவன் பிரம னாதியோர்
விழையு மீசனே வேத வித்தகா
பன்றி யின்பினோர் வேட னானவா
பழுதில் சீருடைப் பாவ நாசனே.

((

கரிமு கத்தானுங் கலப மாமயிற்
கடவு ளானுமென் கவலை வேரறுத் (து)
உரிய மெய்ப்பதங் காண வைக்கும்வீ(று)

உடைய ராகிலி ணங்க விடுத்திடாய்
திரிபு ரம்பொடிப் பட நகைந்தவா
சித்த சன்றனைச் செற்ற கொற்றவா
பரிகொ ளச்செல்வோ னுடைமை கொண்டவா
பழுதில் சீருடைப் பாவ நாசனே.

(9)

கல்லு டன்கற் புனல்க டந்தவன்
கரிய சாரணர்க் கழுவில் வைத்தவன்
சொல்லு வாதவூ ரையன் நாவலூர்
தொண்ட னாதியோர் தொழில்வி ரும்பினேன்
அல்லு நாணுறுங் கறைமி டற்றனே
யம்ப லத்தினின் றாடு மையனே.
பல்லு தீர்த்தருக் கனைமு னிந்தவா
பழுதில் சீருடைப் பாவ நாசனே.

(10)

## நூற்பயன்

### (வெண்பா)

செய்வளமை ஓங்கும் திருநெல்லை யூர்ச்சிறுவன்
சைவ சதகம் தனைப்போற்றி – மெய்வழித்தா(ல்)
அன்னவெண் ணீற்றின் அணி காட்டும் அன்பர்தம்பேர்
சொன்னவர்க்கும் எய்தும் சுகம்.



# செய்யுள் முதற் குறிப்பு அகராதி

# சொல்லடைவு

